॥ ஸ்ரீஹரி: ॥ 606▲

# மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழி

सर्वोच्च पदकी प्राप्तिका साधन ( तमिल )



ஸ்வாமி ராம்ஸுகதாஸ்

गीताप्रेस गोरखपुर
GITA PRESS, GORAKHPUR

|| ஸ்ரீஹரி: || 606

# மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழி

सर्वोच्च पदकी प्राप्तिका साधन (तमिल)

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ ப₃ந்து₄ஶ்ச ஸகா₂ த்வமேவ ।
த்வமேவ வித்₃யா த்₃ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தே₃வதே₃வ ॥

*ஆருயிர் அன்னையும் நீயே, அருமைத் தந்தையும் நீயே,*
*உறவும் சுற்றமும் நீயே, உற்ற நண்பனும் நீயே,*
*கற்கும் கல்வியும் நீயே, சேர்க்கும் செல்வமும் நீயே,*
*அனைத்தும் ஆன என்றன் ஆதிதேவனும் நீயே!*

ஆக்கியோர்

**சுவாமி ராம்ஸுகதாஸ்**

॥ ஸ்ரீஹரி: ॥

# பதிப்பாளர் உரை

இந்நூலை வழங்கியவர் பெருமதிப்பிற்குரிய சுவாமி ராம்ஸுகதாஸ் மகராஜ் அவர்கள். இம்மகான் தொண்ணூற்று ஐந்து வயதிற்குப் பின்பும் அறம் பரப்பும் பணியில் விடாது ஆழ்ந்திருந்தவர். மிக எளிய துறவு வாழ்க்கையை நெறிபிறழாமல் கடைப்பிடித்து வந்த இம்மகான், யாரையும் தம்மை வணங்க அனுமதித்ததில்லை; யாரையும் சீடராக ஏற்றதுமில்லை. ஆயினும், இவரைப் பின்பற்றியோர்க்கும் குறைவில்லை. இவர் நாடு முழுவதும் ஓயாமல் பயணம் மேற்கொண்டு பகவத்கீதை பற்றித் தொடர்ந்து சொற்பொழிவாற்றி வந்தார். இந்நூலில் ஸ்ரீமத் பகவத்கீதை, ஸ்ரீராமசரித மானஸம், ஸ்ரீமத் பாகவதம் மற்றும் பிற அறநூல்களின் கூற்றுக்களை மேற்கோள் காட்டி, மனித வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய அறவழிகளையும், மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழிகளையும் தெளிவாகக் கூறியுள்ளார்.

இந்நூலின் கருத்துக்களைப் பின்பற்றி ஒவ்வொருவரும் மிக உயர்ந்த நிலையை அடைய வேண்டுமென பிரார்த்திக்கிறோம்.

[குறிப்பு:— சுவாமி ராம்ஸுகதாஸ் மகராஜ் அவர்கள் ஸ்ரீமத் பகவத்கீதையை 'ஸாதக ஸஞ்ஜீவனீ' எனும் பெயரில் ஹிந்தியில் அருளியுள்ளார். இந்நூல் தமிழில் ['ஸாதக ஸஞ்ஜீவனீ' — மூலம் — தமிழ் மூலம் — பதவுரை — விரிவுரை] எங்களால் இரண்டு பாகங்களாக வெளியிடப்பட்டுள்ளது.]

— பதிப்பாளர்கள்



|| ஸ்ரீஹரி: ||

# தேவநாகரி எழுத்துக்கள் – சில குறிப்புகள்

ஒரு மொழியின் சொல்லை இன்னொரு மொழியின் எழுத்துக்களால் எழுதுவதை எழுத்துப்பெயர்ப்பு **(Transliteration)** என்று அழைக்கிறோம். ஒரு மொழியிலுள்ள சொல்லின் பொருளை மற்றொரு மொழியில் கூறுவதை மொழிபெயர்ப்பு **(Translation)** என்று அழைக்கிறோம்.

சம்ஸ்கிருதச் சொற்களைப் பிழையின்றி உச்சரிக்க, முறையாக சம்ஸ்கிருதம் கற்றவர்களிடமிருந்து அறிந்துகொள்ள முயற்சிக்க வேண்டும்.

ஆங்கில எழுத்துக்களின் துணைகொண்டு 2, 3, 4 என்னும் குறியீடுகளுடன் சம்ஸ்கிருத எழுத்துக்களுக்கு நிகரான தமிழ் ஒலி வடிவங்கள் இங்கு தரப்பட்டுள்ளன.

| | | | | |
|---|---|---|---|---|
| अ அ | आ ஆ | इ இ | ई ஈ | उ உ |
| ऊ ஊ | ऋ ரி | ॠ ரீ | ऌ ல்ரு | ए ஏ |
| ऐ ஐ | ओ ஓ | औ ஔ | | |

| | | | | |
|---|---|---|---|---|
| **क** க **[ka]** | **ख** க$_2$ **[kka]** | **ग** க$_3$ **[ga]** | **घ** க$_4$ **[gha]** | **ङ** ங |
| **च** ச **[ca]** | **छ** ச$_2$ **[cha]** | **ज** ஜ **[ja]** | **झ** ஜ **[jha]** | **ञ** ஞ |
| **ट** ட **[ta]** | **ठ** ட$_2$ **[tta]** | **ड** ட$_3$ **[da]** | **ढ** ட$_4$ **[dda]** | **ण** ண |
| **त** த **[tha]** | **थ** த$_2$ **[thha]** | **द** த$_3$ **[dha]** | **ध** த$_4$ **[dhha]** | **न** ந,ன |
| **प** ப **[pa]** | **फ** ப$_2$ **[pha]** | **ब** ப$_3$ **[ba]** | **भ** ப$_4$ **[bha]** | **म** ம |
| **य** ய | **र** ர | **ल** ல | **व** வ | |
| **स** ஸ **[sa]** | **ष** ஷ **[sha]** | **क्ष** க்ஷ **[ksha]** | **ह** ஹ **[ha]** | |
| **श** ஶ **[s̄ā]** | **ज्ञ** க்ஞ **[gna]** | **ऋ** ரு **[ri]** | | |

**'श'** என்ற எழுத்து **'ஶ'** என்று எழுத்துப்பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளது. இந்த **'ஶ'** என்னும் எழுத்து **'பிசகு'**, **'கசடு'** என்னும் சொற்களில் வரும் **'ச'**வைப் போன்று ஒலிக்கும்.

சம்ஸ்கிருத–தமிழ் எழுத்துப்பெயர்ப்பில் **(Transliteration)** கொடுத்துள்ள எழுத்துக்கள் எழுத்துப்பெயர்ப்பில் மட்டும்

பயன்படுத்தப்பட்டுள்ளன. மொழிபெயர்ப்பில், வழக்கத்தில் உள்ள தமிழ் எழுத்துக்களே பயன்படுத்தப்பட்டுள்ளன. உதாரணமாக **'सुखं'** என்ற சொல் எழுத்துப்பெயர்ப்பில் **'ஸுக$_2$ம்'** என்றும், மொழிபெயர்ப்பில் **'சுகம்'** என்றும் எழுதப்பட்டுள்ளது.

சம்ஸ்கிருதத்தில் உள்ள உயிரெழுத்தான **'ऋ'** என்பது உயிரெழுத்தாக வரும்பொழுது 'ரி' என்றும், உயிர்மெய்யெழுத்தாக வரும்பொழுது 'ரு' என்றும் உச்சரிக்கப்படுகிறது. (உ–ம்.:– **ऋषि** – ரிஷி, **कृत्वा** – **க்ருத்வா)** இந்த **'ரு'** என்னும் எழுத்து **'எருது'**, **'விருது'** என்னும் சொற்களில் வரும் **'ரு'**வைப் போன்று ஒலிக்கும்.

**'ञ'** என்ற எழுத்து **'ஞ'** என்றும், **'ज्ञ'** என்ற கூட்டெழுத்து **'க்ஞ'** என்றும் எழுத்துப்பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளன. **'ञ'** என்ற எழுத்தில் துவங்கும் சொற்களில்லை.

ஒரு சொல்லிற்கு மேல் இருக்கின்ற புள்ளியானது **'ம்'** என்னும் எழுத்தைக் குறிக்கிறது. (உ–ம்.:– **सुखं** – **ஸுகம்**)

ஒரு சொல்லின் இறுதியில் மேலும் கீழும் வருகின்ற இரு புள்ளிகள் (**:**) **'விஸர்கம்'** என்று அழைக்கப்படுகிறது. இதன் உச்சரிப்பு, இதற்கு முன் வரும் எழுத்தைப் பொறுத்து அமையும். உதாரணம் பின்வருமாறு :–

| | | | | |
|---|---|---|---|---|
| **भवन्तः** | – | ப$_4$வந்த: | – | ப$_4$வந்த**ஹ** |
| **स्थितिः** | – | ஸ்தி$_2$தி: | – | ஸ்தி$_2$தி**ஹி** |
| **प्रभुः** | – | ப்ரபு$_4$: | – | ப்ரபு$_4$**ஹு** |
| **गुणैः** | – | கு$_3$ணை: | – | கு$_3$ணை**ஹி** |
| **भ्रुवोः** | – | ப்$_4$ருவோ: | – | ப்$_4$ருவோ**ஹோ** |

சம்ஸ்கிருதச் சுலோகங்களில் சில இடங்களில் **'ऽ'** அல்லது **'ऽऽ'** என்னும் குறியீடுகளைக் காணலாம். இதற்கு **'அவக்$_3$ரஹம்'** என்று பெயர். இந்த இடங்களில் முறையே **'அ'**, **'ஆ'** என்னும் எழுத்துக்கள் தொக்கி நிற்கின்றன என்று பொருள் கொள்க.



॥ ஸ்ரீஹரி: ॥



**கண்ணன் கழலிணை எண்ணுக மனமே!**

|| ஸ்ரீஹரி: ||

# மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழி

## கிடைத்த வாய்ப்புகளை முறையாகப் பயன்படுத்துதல்

நினைத்துப் பாருங்கள்! பணம் முதலியவற்றால் கிடைக்கும் இன்பமோ, கிடைக்கலாம் என்று எதிர்பார்க்கும் இன்பங்களோ முழுமையானவையா? அவை எப்பொழுதும் பிரியாது, நம் கூடவே இருக்கும் தன்மை உடையனவா? அவை இருந்தாலும், வேறு வகையில் துன்பங்கள் நேர்வதில்லையா? அப்படி இருக்கவே முடியாது. மாறாக, இவற்றின் தொடர்பால் – இவற்றை 'நமதே' என்று நம்புவதனால், லோபம் (கருமித்தனம்) முதலான நரகத்திற்குக் காரணமான பயங்கரமான குறைகள் ஏற்படுகின்றன. இன்பத்தின் வேட்கை உயிருள்ளவரை நெருப்பைப் போல் தகித்துக் கொண்டுதான் இருக்கும். மரணத்திற்குப்பின், கொடிய வேதனை நிரம்பிய நரகங்களையும், பாம்பைப் போன்ற துயரம் நிறைந்த பிறவிகளையும் பெறுகிறது.

நினைத்துப் பார்ப்போம்! நீங்கள் உமது குடும்பத்தினரிடம் இருந்தும் (உறுப்பினர்களிடமிருந்தும்), ஏனையோரிடமிருந்தும் இன்பம் மட்டுமே பெற விழைகிறீர்கள். அப்படியானால், அவர்கள் அனைவருமே சுகமாக இருக்கிறார்களா? ஒருபோதும் துன்பம் அனுபவிப்பதில்லையா? அனைவருமே ஒருவருக்கொருவர் அனுகூலமாக இருக்கின்றனரா? அவர்கள் உங்களுடனேயே இருக்கிறார்களா? அவ்வாறு இருக்க அனைவருமே விரும்புகின்றனரா? நடைமுறையில் அவர்களால் அப்படி இருக்க இயலுமா? பழைய நண்பர்கள் இப்பொழுதும் உங்களுடன் இருக்கிறார்களா? அவர்கள் மனத்திலும்

உடலிலும் மாறுதல் ஏற்படுவதில்லையா? அவர்களிடத்திலும் குறைகள் இருக்கும் விவரம், மற்றவர்களுக்குத் தென்படாதா? அனைவரும் அனைத்திலும் எக்காலத்திலும் முழுமை யானவர்களா? தனக்காக அவர்கள், எதையுமே மற்றவர் களிடமிருந்து எதிர்பார்க்க மாட்டார்களா? குறைந்தபட்சம் உங்களிடமிருந்து எதிர்பார்க்க மாட்டார்களா? மற்றவரிடமிருந்து எதையாவது எதிர்பார்க்கின்றவர்கள், மற்றவர்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய முடியுமா? தானே இன்புற்றிருக்க நினைப்பவன் மற்றவருக்குச் சுகம் கொடுக்க முடியுமா? இதைச் சிந்தியுங்கள்!

விழித்தெழுங்கள்! எல்லோருக்கும் ஒவ்வொரு காலத்திலும் பிரிவு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. ஆயுள் சிறுகச் சிறுகக் குறைந்து வருகிறது. மரணம் கணத்துக்குக் கணம் நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. இவற்றை ஆராய்ந்து பார்த்தால் எளிதில் விளங்குவதில்லையா? 'ஆம், புரிகிறது' என்பீர்களானால், அதை ஏன் சரியான கோணத்தில் பார்ப்பதில்லை? எப்பொழுது பார்ப்பீர்கள்? யாரை எதிர்பார்க்கிறீர்கள்? இந்த மோகத்தில் ஆழ்ந்து கிடப்பது நன்று என்று படுகிறதா? இல்லையென்றால், உங்களுக்கு யார் இதம் செய்வார்? எதை நம்பி இப்படிக் கவலையின்றி உட்கார்ந்திருக்கிறீர்கள்? இப்படி எவ்வளவு காலம் ஓட்ட முடியும்? எப்பொழுதாவது எண்ணிப் பார்த்ததுண்டா? இல்லையெனில், எப்பொழுது நினைத்துப் பார்ப்பீர்கள்? உங்களது உண்மையான தோழன் யார்? 'எனது, எனது' என்று கூறி, உரிமை கொண்டாடி, 'நான்' என்றே முடிவில் கூறிக்கொள்ளும் உங்களது உடல், உங்கள் விருப்பப்படியே நோயின்றி இருக்க முடியுமா? உங்கள் எண்ணப்படியே செயலாற்றுமா? எப்பொழுதும் கூடவே இருக்குமா? இறக்காதா? இதைப் பகுத்தறிந்து பார்த்ததுண்டா? எப்பொழுது பார்ப்பீர்கள்? இதைத் தெரிந்து கொள்ளாமலேயே இருந்துவிட எண்ணமா? இது புத்திசாலித்தனமா? இதன் விளைவுகளை வேறு யாராவது அனுபவிப்பார்களா?

சிந்தியுங்கள்! முன்னர் உங்களுடன் இருந்த பொருட்களும், உறவினர்களும் இன்று உங்களுடன் இருக்கிறார்களா? அவ்வாறே, இன்று உங்களுடன் இருக்கும் மனிதர்கள் என்றும் இருப்பார்களா? எப்பொழுதுமே கூட இருக்க முடியுமா? கொஞ்சம் நிதானமாகச் சிந்தித்துப் பாருங்கள்!

நன்கு ஆராய்ந்து பார்த்தால், கருணையே வடிவான பரம்பொருள்தான் என்றும் கூடவே இருப்பவர் என்ற உண்மை விளங்கும். அதனால்தான் நீங்கள் அவரது திருவடிகளிலேயே சரண்புக வேண்டும்.

| | |
|---|---|
| 1. பரமாத்மாவுடன் என்றும் நிலைபெற்ற உறவு உண்டு. ஜீவன்தான் அதை மறந்துவிட்டான். | 1. சம்சாரத்துடன் உறவு என்பதே கிடையாது. ஜீவன்தான் பிழையாக ஏற்றுக் கொண்டான். |
| 2. பரமாத்மாவிடமிருந்து ஒரு நாளும் பிரிவென்பதே கிடையாது. | 2. சம்சாரத்துடன் ஒருபோதும் சேர்க்கை என்பது இருக்கமுடியாது. |
| 3. பரமாத்மா ஜீவனை ஒருபோதும் கைவிட முடியாது. | 3. சம்சாரம் ஜீவனுடன் ஒருபோதும் இணைந்திருக்க முடியாது. |
| 4. பரமாத்மா என்பது ஆனந்தமே வடிவானது. துயரத்தின் சுவடே கிடையாது. | 4. சம்சாரத்தில் துயரம் மட்டுமே உள்ளது. ஆனந்தம் அறவே கிடையாது. |

கவனம் இருக்கட்டும்! இந்த ஜீவன் பரமாத்மாவின் அம்சம். ***'மமைவாம்ஶ:' (கீதை 15/7), 'ஈஸ்வர அம்ஸ ஜீவ அபி$_3$நாஸீ ।' (மாநஸம்)***. பரமாத்மா ஸர்வோத்தமன். அவரது அம்சமான காரணத்தால் ஜீவனுக்குத் தாழ்ந்தநிலை பிடிப்பதில்லை. அவன் தாழ்ந்த நிலையில் இருக்க விரும்புவதில்லை. தன்னை மகோன்னத நிலையில் இருத்திக் கொள்ளவே முயற்சியுள்ளவனாக இருக்கிறான். உயர்நிலையில் இணையவே முயற்சி உள்ளவனாக இருப்பான். காரணம்

என்ன? இவன் பரமாத்மாவின் அம்சமானதாலும், பரமாத்மாவே அனைத்திலும் உயர்ந்ததாலும், இவனும் மேலே உயர விரும்புகிறான். எந்த ஒரு நிலையில் ஒருவன் இருந்தாலும், அதிலிருந்து உயர்வதையே விரும்புவான்.

உயர்வடைவதில் இரண்டு விஷயங்களை நினைவில் கொண்டால் வெகுவிரைவில் முன்னேற்றம் ஏற்படும். ஒன்று 'செயல்'; மற்றது 'ஆகுதல்'. வாணிபத்தில் லாப–நஷ்டம் ஏற்படாமல் கவனமாக இருப்பது போன்று, ஆன்மிகத்தில் கீழே விழுதல் என்ற தவறு நேராதவாறு எப்பொழுதும் கவனமாக இருத்தல், 'செயல்' என்ற முதல் வகையைச் சேர்ந்தது. என்ன நிகழ்ந்தாலும் எப்பொழுதும் ஆனந்தமாகவே இருக்கவேண்டும். எது நிகழ்ந்தாலும், நமது முன்வினைக்கேற்ப நடக்கிறது. அதுதான் எம்பெருமானின் மங்களம் நிறைந்த நியதி. நமது குறிக்கோள் உறுதி படைத்ததாக இருந்தால், இத்தகைய நம்பிக்கையும் வலுவானதாக அமையும். இத்தகையவர்களுக்கு மேன்மையே ஏற்படும். அவன் உயர்நிலையையே அடைகிறான். இது நியதி. 'செயல்' என்பதில் கவனக்குறைவுதான் வீழ்ச்சிக்குக் காரணம். அதனால், அனுகூலம் நேர்ந்தால் ஆனந்தமும், வேண்டாதவை நேர்ந்தால் துயரமும் ஏற்படுகின்றன.

எப்பொழுதும் செயலில் கவனம் தேவை. கவனம் என்னவென்றால் செய்யத்தகாதனவற்றைச் செய்யக் கூடாது. அதேபோல இயலாத செயலைப் பற்றிய எண்ணமும் கூடாது. அதாவது, அறநூல்களுக்கு மாறான செயல்களையோ, உலக மரியாதைக்குப் புறம்பான செயல்களையோ தவிர்த்தல் வேண்டும். நாம் விரும்பினாலும் பெற இயலாததான பணம், கௌரவம், பெருமை, புகழ், பதவி, செல்வாக்கு, அந்தஸ்து – இவற்றை அடைய கவலை கொள்ள வேண்டாம். தகாத செயல்களின் எண்ணத்தை விடுவதாலேயும், நடைபெறாத விஷயங்களை யோசிப்பதைத் தவிர்ப்பதாலேயும் மிகத் தேவையான செயல்களைச் செய்யும் வலிமையும்

தகுதியும் ஊக்கமும் கிடைத்து விடுகின்றன. கீதையில் எம்பெருமான் அர்ஜுனனிடம் இக்கருத்தை இம்மாதிரியாகக் கூறுகிறார்— *'கர்மண்யேவாதி₄காரஸ்தே மா ப₂லேஷு கதா₃சந ।'* *(2/47)* – ''உனக்கு செய்யத்தக்க கர்மம் ஆற்றுவதில்தான் உரிமை உள்ளது; பலனில் ஒருபோதும் இல்லை.'' ஆகவே, மனிதன் பலனில் பற்றின்றிச் செயல்புரிதல் வேண்டும்.

தன்னலம் துறந்து, பிறர் நலம் பேணும் செயலே, செய்யத்தக்க செயல் என்ற பெயர் பெறுகிறது. தன்னல நோக்கில் செய்யப்படும் கர்மம் (கர்த்தவ்யம்) 'கடமை' என்ற பெயர் பெறாது. அது வெறும் கர்மம் மட்டும்தான். இத்தகைய கர்மத்தைக் கர்மத்திற்கான தகுதியற்ற பிறவிகளான பறவை–விலங்குகள்கூடச் செய்ய முடியும். பின், மனிதப்பிறவி பெற்றதன் பயன்தான் என்ன? ஆகவே, மனிதன் தன்னலம் துறந்து, பிறர் நலம் பேணும் முயற்சியைச் செய்ய வேண்டும். சுகத்தைக் காட்டிலும் அதிகமாக, பிறருக்கு நலம் வாய்ந்ததைச் செய்வதிலேயே, நமது நோக்கம் இருக்க வேண்டும். நீதிமான்களின் கூற்று—

***ஸந்தோஷஸ்த்ரிஷு கர்தவ்ய: ஸ்வதா₃ரே போ₄ஜநே த₄நே ।***
***த்ரிஷு சைவ ந கர்தவ்ய: ஸ்வாத்₄யாயே ஜபதா₃நயோ: ॥***

''மனைவி, உணவு, தனம் – இவற்றில் 'போதும்' என்ற மனநிறைவு வேண்டும். ஏனெனில், இவை முன்வினைப்பயன். கல்வி, வழிபாடு, கொடை ஆகியவற்றில் 'போதும்' என்ற நினைவு ஏற்பட்டுவிடக் கூடாது. ஏனெனில், இவை இப்பிறவியின் புதிய வினைகள்.'' இவற்றில் 'போதும்' என்று திருப்தி அடைபவன் கடமை தவறியவனாவான். ஆகவே, கடமையில் கண்ணுங்கருத்துமாக ஈடுபடுதல் வேண்டும்.

பொருளைச் சேர்ப்பது முதலிய விஷயங்களில், நாம் மனநிறைவு கொள்ள வேண்டும் என்று நீதி நூல்கள் கூறுகின்றன. இதன் நோக்கம் என்னவென்றால், நாம் பொருள் முதலியவற்றில் கிடைத்ததைக் கொண்டு திருப்தி பெற

வேண்டும். எது கிடைத்தாலும் அதில் நாம் திருப்தியற்று இருக்கக் கூடாது. ஆனால், கடமையை நிறைவேற்றுவதில், நாம் எப்போதும் குறை வைக்கக் கூடாது.

விருப்பமான தொழிலில் மனிதன் ஆர்வத்துடன் ஈடுபடுகிறான். இது இயற்கை. இதனால் தொழிலாற்றுபவன் மேன்மையும் அடைகிறான்.

இன்று நாட்டில் எங்கும் வேலையில்லாத் திண்டாட்டம் பரவியிருக்கிறது. இதற்கான பல காரணங்களில் முதன்மையான ஒரு காரணம், மக்கள், தாம் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்வதில்லை என்பது. மிக மேன்மையான செயல்களிலேயே ஈடுபடுதல்; ருசி, ஆசை, ஆடம்பரம் – இவற்றை ஒழித்து எளிமையான வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுதல்; மற்றவரின் நன்மைக்காகத் தொண்டுள்ளத்துடன் தனது ஆற்றலையும் உடைமைகளையும் பயன்படுத்துதல்; பிறர் உரிமையைப் பாதுகாத்தல்; பிறருக்குக் கிடைக்க வேண்டிய உரிமையை எப்பொழுதும் நம்முடையதாக ஆக்காமல், சாதுர்யத்துடன் தனது கடமைகளில் தவறாமல் வாழ்தல் – இந்நெறிகளை ஒவ்வொருவரும் கடைப்பிடித்தால் வேலையில்லாத் திண்டாட்டத்தினால் துன்புற மாட்டார்கள். 'நம் முன்வினைப்படி நமக்குக் கிடைக்கும்' என்ற பேச்சின் உட்பொருள், 'பயனில் கவலை கொள்ளாதே' என்பதுதான். 'எவ்விதச் செயலுமின்றிச் சும்மா இரு' என்று பொருள் தராது. ஆகவே, கடமையாக ஏற்பட்டுள்ள செயல்களில் குறை வைக்கக் கூடாது. இந்த முறையில் 'கர்தவ்ய' கர்மங்களில் ஆர்வத்துடன் முழுமையாக ஈடுபடுபவர்களுக்கு, இவ்வுலகிலும் பாரமார்த்திகத்திலும் மேன்மை ஏற்படும். ஆயினும், இரண்டிலும் ஒரு வேற்றுமை உள்ளது. உலகியலில் முன்னேற்றம் காண, பொருளாதார நோக்கில் உயர்வு காண்பதற்காக, முழு ஈடுபாட்டுடன் கடமையாற்றுபவனுக்கு ஏற்படும் 'முன்னேற்றம்' என்பது – அவனது செயல்திறனின் வளர்ச்சியும், தகுதியின் வளர்ச்சியும் ஆகும். ஆனால், இதன்

பயனாக செல்வம், அந்தஸ்து, செல்வாக்கு – இவையும் பெருகும் என்ற கட்டாயம் இல்லை. ஏனெனில், இவை முன்வினைப் பயனைப் பொறுத்தவை; கடமையாற்றுபவனின் கையில் இல்லை. இதற்குமாறாக, ஆன்மிக மேன்மையின் பொருட்டு வினையாற்ற முற்படுபவன் முழுமையாய்ப் பயன் பெறுகிறான். அதாவது, அவனுள் அன்பும் தெளிவும் அமைதியும் ஊக்கமும் தாமாகவே தோன்றுகின்றன; குழப்பமும் சோம்பலும் அவனிடமிருந்து விடைபெறுகின்றன; செயல்திறன் மிளிர்கிறது. இத்தகைய பயன்கள் கட்டாயம் ஏற்படுகின்றன; செயலும் ஈடுபாட்டுடன் முழுமை பெறுகிறது. ஏனென்றால், இவை அவனுடைய முன்னேற்றத்திற்கான சொந்த உடைமைகள்.

இத்தகைய வேறுபாடு ஏன்? 'இந்த மனித உடல் பரமாத்மாவை அடைவதற்காகவே நமக்குக் கிடைத்துள்ளது!' என்பதே இதற்கான பதில். ஆகவே, ஆன்மிக மேன்மையின் பொருட்டு ஈடுபாட்டுடன் கர்மங்கள் செய்பவர்கட்கு, ஆன்மிக மேன்மை கட்டாயம் கிடைத்தே தீரும். ஆம், இதற்கான முயற்சியில் ஈடுபடாவிட்டால், அது எப்படிக் கிடைக்கும்? மாறாக, உலகியல் பொருட்களை அடைவதில், நம் முன்வினையே முக்கிய இடம் பெறுகிறது. அதை அனுசரித்தே பயன் பெறுகிறோம். முன்வினை அனுகூலமாக இருந்தால் விரும்பும் பொருளைப் பெறலாம். ஆனால், 'நம் முயற்சியினால் அடைவது உறுதி' என்ற நியதி இல்லை. பரமாத்ம பிராப்தியில், ஆன்மிக முன்னேற்றத்தில் ஆர்வம்–ஈடுபாடு முக்கியமானது. உலகியல் பொருட்களின் சேர்க்கையில் (பொருளாதார முன்னேற்றத்தில்) முன்வினை (பிராரப்தம்) முக்கியமானது. இதுவே திரண்ட பொருள். ஆகவே, மனிதன் சோம்பல், மனக்குழப்பம் – இவற்றில் நேரத்தை வீணடிக்காமல் ஜபம், வழிபாடு, அத்யயனம், அறநூல்களைச் சிந்திப்பது, அனைவரது நன்மைக்கான வழியை யோசிப்பது ஆகிய இவற்றையே எப்பொழுதும் செய்ய வேண்டும்.

மனிதன், அனைவரது நன்மையையும் நினைத்துக் கொண்டு இருப்பதாலேயே அனைவருக்கும் நன்மை ஏற்பட்டுவிடுகிறது. ஆயினும், ஸ்தூல புத்திக்காரர்கள் இதைப் புரிந்து கொள்வதில்லை. ஸ்தூல வஸ்து (பருப்பொருள்) ஓர் இடத்தில்தான் இருக்கும். ஆனால், சூட்சும வஸ்து (நுண்பொருள்) எங்கும் பரவி நிற்கும். எண்ணங்கள் நுட்பமானவை. ஆகவே, 'அனைவரும் மேன்மை பெறட்டும்' என்ற நல்லெண்ணம் மனத்தில் உதிக்குமானால், அந்த பாவனை வளிமண்டலத்தில் பரவிவிடுகிறது. அதனால், அனைவருக்கும் நன்மை விளைகிறது. ஆகவே, பகவான் பகர்கிறார்— ***'தே ப்ராப்நுவந்தி மாமேவ ஸர்வபூ$_4$தஹிதே ரதா: ॥' (கீதை 12/4)*** (எல்லா உயிரினங்களிடத்தும் பிரியம் உள்ளவர்கள், என்னையே அடைகின்றனர்.) எவரது அந்தக்கரணத்தில் விருப்பும் வெறுப்பும் ஒழிந்து, அனைவரும் நன்மை பெறவேண்டும் என்ற எண்ணப்பாங்கு நிரம்பி இருக்கிறதோ, அவர் ஸமஷ்டியுடன் ஒன்றிவிடுகிறார்.

கீதையில் எம்பெருமான் கூறுகிறார்— ***'ஸுஹ்ருத$_3$ம் ஸர்வபூ$_4$தாநாம் க்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்ச$_2$தி ॥' (கீதை 5/29)*** – "என்னை எல்லா உயிர்களுக்கும் தன்னலமற்ற கருணை நிரம்பிய அன்பனாக அறிந்து கொண்டு (பக்தன்) அமைதி அடைகிறான்." இவ்வாறாக, எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டும் என்ற மனப்பான்மை உள்ளவன் ***'ஸர்வே ப$_4$வந்து ஸுகி$_2$ந:'*** – 'அனைவரும் இன்பம் பெற்று வாழ்க'; ***'ஸர்வே ஸந்து நிராமயா:'*** – 'அனைவரும் நோயற்று வாழ்க'; ***'ஸர்வே ப$_4$த்$_3$ராணி பஶ்யந்து'*** – 'அனைவருக்கும் மங்களமே உண்டாகட்டும்'; ***'மா கச்சித்$_3$ து$_3$:க$_2$ப$_4$ாக்$_3$ ப$_4$வேத்'*** – 'ஒருவரும் சிறிதுகூடத் துன்புறக் கூடாது' – என்ற ஒருவனது மனப்பான்மை, பிராணிகளின் உயிர்த்தோழனான எம்பெருமானது உள்ளக்கருத்துடன் ஒன்றி நிற்கிறது. பரமாத்மாவின் திருஉள்ளப்பாங்குடன் ஒன்றிவிடுவதால், அவன் பரமாத்மாவுடன் இரண்டறக் கலந்துவிடுகிறான். ஆயினும், அவன் தற்பெருமை கொண்டால் இந்த ஆற்றல் கிடைக்காது.

அறநூல்கள் பகர்வது— ‘தே$_3$வோ பூ$_4$த்வா யஜேத்$_3$ தே$_3$வம் ।’ – ‘தேவதைகளுக்கு பூஜை செய்யும்போது தெய்வமாகவே ஆகிவிடு.’ இது போன்ற மந்திர ஜபத்தில் சித்தி பெற மந்திரங்களை ஜபிப்பவர், அவற்றைத் தம்மில் நியாஸம் செய்து கொண்டு, அவற்றின் வடிவமாகவே ஆகிவிட வேண்டும். இவ்விதமே மனத்தில் அனைவரின் நன்மையையே கோரும் மனப்பான்மை உடையவர், பரமாத்மாவையே அடைந்துவிடுகிறார். ஆகவே, எக்காலத்திலும் அனைவரது நன்மையை விரும்பும் தன்மையே, பரமாத்மாவை அடைய மிகச்சிறந்ததும் எளிமையானதுமான வழியாகும்.

ஸ்ரீராமசரிதமானஸத்தில் கோஸ்வாமி துளசிதாசர் கூறுகிறார்—

***ஸுர நர முநி ஸப்$_3$ கை யஹ ரீதீ ।***
***ஸ்வாரத$_2$ லாகி$_3$ கரஹி(ம்) ஸப்$_3$ ப்ரீதீ ॥***

***(கிஷ்கிந்தா காண்டம் 11/1)***

‘‘தன்னலத்திற்காகவே அமரர், மனிதர், முனிவர் அனைவரும் அன்பு காட்டுகிறார்கள்.’’

***ஸ்வாரத$_2$ மீத ஸகல ஜக$_3$ மாஹீ(ம்) ।***
***ஸபநேஹு(ம்) ப்ரபு$_4$ பரமாரத$_2$ நாஹீ(ம்) ॥***
***ஹேது ரஹித ஜக$_3$ ஜுக$_3$ உபகாரீ ।***
***தும்ஹ தும்ஹார ஸேவக அஸுராரீ ॥***

***(உத்தர காண்டம் 46/3)***

‘‘அரக்கர்க்குப் பகைவனே! உலகனைத்தும் தன்னலத்திலேயே ஆழ்ந்துள்ளது. கனவில்கூட பிறர்க்கு நன்மை செய்யும் மனப்பாங்கு கிடையாது. ஆனால், பயன் கருதாமல் உதவுபவர்கள் நீயும், உன் அடியாரும் மட்டும்தான்.’’

எனவே, தன்னலம் துறந்து, நன்மை செய்யும் பாவனை கொண்ட ஜீவன், எம்பெருமானின் தன்மையை அடைந்து விடுகிறான். உண்மையில் அனைவரும் அவரது (பகவானின்) தன்மை பெற்றவர்தாம். ஆனால், தன்னலத்தால்

ஜடப்பொருட்களைச் சார்ந்துவிடுவதால், ஜீவன் மிகத் தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவனாகிவிடுகிறான். அடியார்கள் உரைத்தார்கள்—

*சாஹ சூஹடீ ராமத$_3$ாஸ் ஸப்$_3$ நீசநமே(ம்) நீச ।*
*தூ தோ கேவல ப்$_3$ரஹ்ம த$_2$ா, சாஹ ந ஹோதீ பீ$_3$ச ॥*

ராம்தாஸ் என்ற அடியார் கூறுகிறார்— ஆசை என்பது இழிந்ததிலும் இழிந்தது. நீயே பரம்பொருளாக இருந்தாய். இடையில் ஆசை ஏற்படாவிட்டால், பரம்பொருளாகவே இருந்திருப்பாய்.†

இச்சையால் ஜீவன் நீசனாகிவிட்டான். ஒரு கவிஞர் கூறுகிறார்— *'ஹை ஶ்ரேஷ்ட$_2$ஸே பீ$_4$ ஶ்ரேஷ்ட$_2$ தூ, பர சாஹ கரகே ப்$_4$ரஷ்ட ஹை ।'* – "(நீ,) மிக உயர்ந்ததிலும் உயர்ந்து இருந்தாய். ஆசை வைத்து

† இதே கருத்தை விஷ்ணு சித்தர் என்ற பெரியாழ்வாரின் பாசுரம் ஒன்றில் காணலாம்.

*ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகி*
*அன்னையத்தனென் புத்திரர் பூமி*
*வாசவார் குழலாளென்று மயங்கி*
*மாளுமெல்லைக்கண் வாய்திறவாதே*
*கேசவா புருடோத்தமாவென்றும்*
*கேழலாகிய கேடிலீயென்றும்*
*பேசுவாரவரெய்தும் பெருமை*
*பேசுவான் புகில் நம்பரமன்றே*

ஆசையின் வசப்பட்டு, 'இவர் எனது தாய், தந்தை, மகன், மனைவி, இது எனது பூமி (சொத்து)' என்ற எண்ணங்களில் ஆழ்ந்து, மயங்கி வாழ்நாள் முடியும்வரை வாய்த்திறவாமல் இருந்துவிட்டேன். மேலும், பக்தர்களின் பெருமையை இவ்வாறு கூறுகிறார்— கேசவனே! புருஷோத்தமனே! வராக அவதாரம் எடுத்தவனே! அழிவற்றவனே! என்று உன்னைப் புகழந்து பேசுவார் பெருமையை, நான் எப்படி முழுமையாகக் கூற முடியும்? உன்னுடைய கல்யாண குணங்களைப் பேசுவார் பெருமையைக் கூற முயற்சி செய்தாலும், நான் அதில் தோற்றுப் போவேன்.

விலக்கப்பட்டவனாகி விட்டாய். எனவே, நாம் அனைவரும் இவ்விச்சையை விடவேண்டும்.''

வணிகர்களுடைய செயல்பாடு லாபம் ஈட்டுவதிலேயே இருக்கிறது; நஷ்டத்தில் இல்லை. நீ, அழியும் பொருளை உனக்காக மட்டுமே உபயோகப்படுத்திக் கொண்டால், பொருள் அழிந்துவிடுவது மட்டுமல்லாமல், உனக்கும் வீழ்ச்சி நிச்சயம். அப்பொருளை மற்றவருக்குத் தொண்டு செய்வதில் பயன்படுத்தினால், அதுவும் பொருள் படைத்ததாகும். உனக்கும் மேன்மை ஏற்படும். உலகின் அனைத்துப் பொருட்களும் உன்னைவிட்டு நீங்கிவிடும். முடிவில் நீயும் அவற்றிலிருந்து பிரிந்து விடுவாய். இது உறுதி. அழியும் பொருட்களைப் பிறரது தொண்டின் நிமித்தம் பயன்படுத்தினால், அவற்றால் நீ, அழியாத பரம்பொருளை அடைவாய் – ***'மர்த்யேநாப்நோதி மாம் ருதம்' (ஸ்ரீமத் பாகவதம் 11/29/22).*** பொருட்களை வெளிப்படையாகத் துறத்தல் தேவையில்லை. அவற்றில் உள்ள 'எனது' என்ற எண்ணத்தையும் பற்றுதலையும் துறப்பதுதான் முக்கியம். (அவற்றை) மற்றவர் நலனுக்காகப் பயன்படுத்தும் மனப்பாங்கையும் பெறவேண்டும். அந்த மனோபாவமே மேன்மை தரும் – பொருட்கள் உங்களிடமே இருந்தாலும்கூட! மாறாக, நாம் நமது சொத்து முழுவதையும் மற்றவருக்கு அளித்துவிட்டு, மனத்தில் பயன் கருதாத மனப்பாங்கு இல்லையெனில் மங்களம் (ஆன்மிக மேன்மை) ஏற்படாது.

மரிக்கும் ஒரு ஜீவன், தான் பெரிதும் மதிப்புக் கொடுத்த பொருட்கள் அனைத்தையும் விட்டுவிட்டுத்தான் போகிறது. ஒரு துரும்பையும்கூட எடுத்துச் செல்வதில்லை.† ஆயினும்,

---

† ***காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே.***

***— பட்டினத்தார்***

உடலைவிட்டு உயிர் பிரிந்து செல்லும்போது காதறுந்த ஊசியைக்கூட எடுத்துக் கொண்டு போக முடியாது.

அந்த ஜீவன் சிரேயஸை (மேன்மை) பெறுகிறதா? அது போலத்தான். உட்கருத்து யாதெனில், கட்டாயம் உன்னைவிட்டு நீங்கிச் செல்லும் பொருட்களை 'எனது' என்று கருத வேண்டாம். ''உலகம் பரமாத்மாவினுடையது. இங்குள்ள அனைத்தும் அவருடையதே. எனது என்று கருதப்படும் பொருட்களும் அவருடையதே. ஆகவே, இவற்றின் மூலம் எவ்வாறு அனைவருக்கும் நன்மை செய்வேன்? 'எனது' என்று கூறப்படும் பொன்–பொருள், பதவி–செல்வாக்கு – இவற்றால் எவ்விதம் மற்றவர்க்கு உதவலாம்'' என்றே நாம் எண்ணம் கொண்டிருக்க வேண்டும்.

கருமி, இன்னும் எப்படிப் பொருள் சேர்ப்பது? என்ற நோக்கம் கொண்டிருப்பானோ, அது போன்றே, நமது உடைமைகளால் மற்றவர்க்கு மேலும் எவ்வாறு நன்மை செய்யலாம்? என்ற பேராசை கொள்ள வேண்டும். இந்த மனப்பாங்கு நமக்கு ஏற்பட்டாலும்கூட, நாம் எவ்வளவு முயன்றாலும், நமது உடைமைகள் அனைத்தாலும் மற்றவருக்கு முழுக்க முழுக்க உதவ முடியாது. காரணம், மற்றவருக்கு நம்மிடம் பொருள் பெறுவதற்கான தேவையோ, தட்டுப்பாடோ ஏற்படாது போகலாம்.

பொருளைத் தேவையான விஷயத்தில் பயனுள்ள முறையில் செலவு செய்வதே, 'பொருள் ஈட்டுவதைக் காட்டிலும் கடினம்' என்று சிறந்த சிந்தனையாளர்களும், பணம் படைத்தவர்களும் கூறியுள்ளனர். அது போன்றே, 'நேரம்' என்னும் விலைமதிப்பற்ற செல்வம் அனைவருக்கும் கிடைத்துள்ளது. அதைச் சிறந்த முறையில் செலவிடுவதும் கடினம்தான். சாமானியர்கள் பணம் ஈட்டுவதில் செலவிடும் கவனத்தை, அதைப் பயனுள்ள முறையில் செலவிடுவதில் காட்டுவதில்லை.

மற்றவர்களைப் பற்றிப் பேசுவானேன்? சத்சங்கத்தில் ஈடுபடும் சகோதர, சகோதரியரும்கூட சிறந்த நுட்பமான

விஷயங்களைக் கேட்பதில் கவனம் செலுத்துகிறார்களே தவிர, அவற்றைச் செயல்படுத்துவதிலும், வாழ்க்கையை அதற்கு அனுகூலமாக்கிக் கொள்வதிலும் அதிகக் கவனம் செலுத்துவதில்லை. கேட்ட விஷயங்களைக் கடைப்பிடித்து, அவற்றைச் செயல்படுத்துவதில் அதிக கவனம் செலுத்த வேண்டும். சத்சங்கம், அறநூல்கள் – இவற்றின் வழியில், வாழ்வை அமைத்துக் கொள்ள இயலவில்லையே என்ற வருத்தம் ஏற்பட வேண்டும்.

நம்மிடம் நிறையப் பணம் இருந்தால், அதன் மூலம் புண்ணியம் நிறைய சம்பாதிக்கலாம் என்று பெருவாரியான மக்கள் நினைக்கிறார்கள். அதன்படி பொருள் சேர்ப்பதிலும் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், அறநூல் கூறுவது— ''அப்பணிகள் புரிவதற்காகப் பொருளீட்டும் முயற்சி ஒருபுறம் இருக்கட்டும். அவ்விதம் ஆசைப்படுவதுகூட உயர் பண்பாடு அல்ல.'' வேள்விக்காகவும், தான–தர்மங்களின் பொருட்டும் பணத்தில் ஆசை கொள்வது தவறு. மாறாக, 'நம்மிடம் எவ்வளவு பொருள் உள்ளதோ, அதை நற்கர்மங்களில் ஈடுபடுத்துவது எங்ஙனம்?' என்று ஆராய்வது மேன்மை தரும். அறநூல் கூறுவது—

***த$_4$ர்மார்த$_2$ம் யஸ்ய வித்தேஹா***
***வரம் தஸ்ய நிரீஹதா ।***
***ப்ரக்ஷாலநாத்$_3$தி$_4$ பங்கஸ்ய***
***தூ$_3$ராத$_3$ஸ்பர்ஶநம் வரம் ॥***

***(பஞ்சதந்த்ரம்)***

சுத்தமான துணிகளை முதலில் சாக்கடை நீரில் நனைத்துவிட்டு, அதன்பின் வீட்டில் உள்ள குழாய் நீரால் சாக்கடையால் ஏற்பட்ட அசுத்தத்தை அகற்றலாம் என்று நினைப்பதும், தர்மம் செய்வதற்காகப் பொருள் சம்பாதிக்கலாம் என்று எண்ணுவதும் ஒன்றேயாகும். இத்தகைய முட்டாள்தனமான செயல் செய்பவர்கள் ஒன்றை ஆராய்ந்து அறிவதில்லை. சுத்தமாக உள்ள துணியை ஒருமுறை சாக்கடையில் போட்டுத்

திரும்பவும் தூய்மை செய்வானேன்? இவ்விதமே அறச்செயல்களுக்குப் பணத்தைப் பற்றிய யோசனை எதற்கு? ஆம், நமக்குக் கிடைத்துள்ள பொருள், கல்வி, வலிமை, அறிவு – இவற்றை நல்லமுறையில் பயன்படுத்தினால் போதுமானது. பொன்னும் பொருளும் வந்து போகக் கூடியவை. நீவிரோ என்றுமுள்ள ஆத்மா. ஆகவே, பணம் உமக்கு என்ன இன்பத்தைத் தந்துவிட முடியும்? ஆகவே, அதில் ஆசை வைப்பது, கழிவுநீரில் தூய துணியை நனைப்பதற்கு ஒப்பாகும். கழிவுநீரும் உடலும் ஒரே இனத்தைச் சேர்ந்தவை. இவைகள் பிரகிருதியின் மாறுபட்ட பொருட்கள்தான். ஆயின், நீங்கள் சின்மயமானவர். பொருள் ஜடமானது; அழியக் கூடியது. இதன் மூலம் சின்மயமான தன்மை பெற இயலாது. ஆனால், ஜடத்தன்மையைத் துறந்துவிட்டால், சின்மயத்தன்மை எய்திவிட முடியும்.

பணத்தின் மூலம் பரம்பொருளை விலைக்கு வாங்கி விடலாம் என்று எண்ணுவது பெருந்தவறு. பொருள் ஒரு பக்கம் இருக்கட்டும் – எம்பெருமான் சொல்வதோ— **'நாஹ(ம்) சேதை₃ர்ந தபஸா ந த₃ாநேந ந சேஜ்யயா ।'** ***(கீதை 11/53)*** – "நான் வேதங்களால் அறியப்படுவதில்லை. தவத்தாலும் தானத்தாலும் யக்ஞங்களாலும் காண இயலாதவன்." விடுங்கள், இந்த அளவு தான–தர்மங்கள் செய்தால் பகவானைப் பெற்றுவிடலாம் என்றால், இது ஒன்றுமே நடக்கவொண்ணாது. இவ்வளவு தவம் செய்தால் பகவானை அடைந்துவிடலாம் என்றால், இதுவும் நடக்காத ஆசைதான். பகவான் சொல்கிறார்— "இவற்றின் மூலம் என்னை அடைய முடியாது." ஆம், இவ்வளவு ஜடப் பொருட்களினுடைய தொடர்பை அறுத்தால்தான், சின்மய தத்துவமான பகவான் எஞ்சி நிற்பார்.

இங்கு யாராவது கேள்வி எழுப்பக் கூடும்— "நீங்களோ வேள்வி, கொடை, தவம் – இவற்றினால் பகவானை அடைய முடியாது என்கிறீர்கள். ஆனால், பகவானோ—

***யத்கரோஷி யத$_3$ஶ்நாஸி***
***யஜ்ஜுஹோஷி த$_3$தா$_3$ஸி யத் ।***
***யத்தபஸ்யஸி கௌந்தேய***
***தத்குருஷ்வ மத$_3$ர்பணம் ॥***

***(ஸ்ரீமத் பகவத்கீதை 9/27)***

'குந்தியின் புதல்வனே! (நீ) எந்தக் காரியம் செய்கிறாயோ, எதை உண்கிறாயோ, எதை வேள்வியாகச் செய்கிறாயோ, எதை தானமாகக் கொடுக்கிறாயோ, எதை தவமாகச் செய்கிறாயோ, அவையனைத்தையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிடு' என்கிறாரே?''

எதைச் செய்தாலும் எனக்கு அர்ப்பணித்து விடு. அதனால் நல்லதும் கெட்டதுமான பலன்களிலிருந்து விடுபடுகிறாய். ***'ஶுபா$_4$ஶுப$_4$ப$_2$லைரேவம் மோக்ஷ்யஸே' (கீதை 9/28)*** என்றும் கூறுகிறாரே. வேள்வியும் கொடையும் ஜபமும் தனது செயல் என்று கருதாமல், கண்ணனுக்கே அர்ப்பணம் செய்துவிட வேண்டும் என்பதே இதன் கருத்து. வேள்வியும் தானமும் ஜபமும் எம்பெருமானை அடைவிக்காது. ஆனால், இவற்றுடன் ஒட்டியிருக்கும் 'எனது' என்ற எண்ணத்தைத் துறந்துவிட்டால்தான், பகவானை எளிதில் பெறலாம் என்று தீர்மானிக்கலாம்.

***த்யாகா$_3$ச்சா$_2$ந்திரநந்தரம் । (ஸ்ரீமத் பகவத்கீதை 12/12)***
***த்யாகே$_3$நைகே அம்ருதத்வமாநஶு: । (கைவல்ய உப. 3)***

வேதமும், அதை அடியொற்றிய அறநூல்களும் 'தியாகத்தினால் பகவான் கிடைக்கிறார்' என்று பகர்கின்றன. தன் சுயநலத்தையும் அகங்காரத்தையும் விட்டுவிட்டு, மற்றவர் நலனுக்காக முயற்சி மேற்கொள்வதே தியாகம். விதைகளை விதைத்தால் பல்கிப் பெருகுகின்றன; உண்டுவிட்டால் அழிந்துவிடுகின்றன. அது போன்றே போகங்களைப் பிறரது தொண்டில் பயன்படுத்தினால், பாரமார்த்திகத்தை அறுவடை செய்யலாம். அதாவது, ஜீவனுக்கு மேன்மை கிடைக்கிறது.

போகங்களை நாமே அனுபவித்தால் அவை அழிந்துபோய், நமது வீழ்ச்சிக்கும் காரணமாய் அமைகிறது.

'நாம் பணம் முதலியவற்றைப் பயன்படுத்தவே கூடாதா?' என்ற கேள்வி எழலாம். புனிதமான பொருட்களைப் பயன்படுத்தலாம். வேள்வியில் எஞ்சிய பொருட்கள் புனிதமானவையாகும். பகவான் கூறுகிறார்—

*பு$_4$ஞ்ஜதே தே த்வக$_4$ம் பாபா*
*யே பசந்த்யாத்மகாரணாத் ॥*

***(ஸ்ரீமத் பகவத்கீதை 3/13)***

''எந்த மனிதர்கள் தமக்காகவே சமைக்கிறார்களோ (செயல்படுகிறார்களோ), அந்த பாவிகள் பாவத்தையே உண்கிறார்கள்.''

மறை பகர்வதாவது—

*கேவலாகீ$_4$ ப$_4$வதி கேவலாதீ$_3$ ।*

அனைவருக்கும் அளிக்கும் மனப்பான்மை மனத்தில் வளர்ந்தால், எல்லோருக்கும் கொடுக்கும் காரியமும் நடைபெறும். தன் நிர்வாகத்திற்குத் தேவையான உணவு–உடைகளையும் பயன்படுத்திக் கொள்ளலாம். உணவு–உடை மட்டுமல்ல; உயர்ந்த விஷயங்கள் உங்களுக்குத் தெரிந்திருந்தால், அதை மற்றவரின் நன்மைக்குப் பயன்படுத்தலாம். 'அனைவரையும் எப்படி மேன்மை பெறச் செய்யலாம்?' என்ற மனோபாவம் எப்பொழுதும் இருக்க வேண்டும். அனைவரும் நன்மை பெற வேண்டும் என்ற ஒரே ஆர்வமே, எம்பெருமானிடம் நம்மைச் சேர்த்துவிடும். இறைவனும் அவரது அடியாரும்தான், ஒரு காரணமும் இல்லாமல் நன்மை செய்பவர்கள்— **'ஹேது ரஹித ஜக$_3$ ஜூக$_3$ உபகாரீ ।'** இவ்விதம் 'எவருடைய மனத்தில் எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டும்' என்ற எண்ணம் இருக்கிறதோ, அவருக்கு உறுதியாக மேன்மை ஏற்படும். காரணம், இத்தகையவர்களைப் பற்றி, **'மம ஸாத$_4$ர்ம்யமாக$_3$தா: ।' (கீதை 14/2)** – 'அவர்கள் எனது

தன்மையை அடைந்துவிட்டவர்கள்' என்று பகவான் கீதையில் பகர்கிறார்.

தாழ்ந்த பொருட்களின் தொடர்பால், நாமும் தாழ்ந்துவிட்டோம். அனைவருக்கும் தோழனான பகவானின் தொடர்பால், நாம் உயர்வடைந்து விடலாம். எம்பெருமானுக்குச் சமர்ப்பித்த பொருட்கள் அனைத்தும் தூய்மை பெற்று விடுகின்றன. அவரது பிரசாதமாகக் கல்கண்டு மாதிரியான சாதாரணமான பொருள் வழங்கப்பட்டாலும், அதைப் பெறுவதற்குப் பெரிய பெரிய பணக்காரர்களும் கை நீட்டுகிறார்கள். அவர்களுக்கு அவை கிடைக்காத பொருளா? இல்லை, ருசிக்கு அடிமையானவர்களா? வேறு என்ன காரணம்? பகவானுக்குப் படைக்கப்பட்டவை புனிதமாகி மகத்துவம் பெற்றுவிடுகின்றன.

இவ்விதமே பகவானுக்காகவே அனைத்தையும் அர்ப்பணம் செய்தால் – மிக உயர்வாகக் கருதப்படும் அகங்காரத்தையும் துறந்துவிட்டால் – அவனுடையதான அனைத்துமே தூய்மை பெற்றுவிடும். எவ்வளவு இனிய, எளிய விஷயம்! மனோபாவம் மட்டும் மாறினால் போதுமானது. மனப்பான்மையின் மாற்றமே பெரிய வேறுபாட்டைத் தோற்றுவிக்கிறது. வணிகர்கள் அறிந்த ஒரு விஷயம். வாங்கப்பட்ட சரக்கின் விலை உயர்ந்தால் லாபமும், விலை குறைந்தால் நஷ்டமும் ஏற்பட்டுவிடுகிறது. மார்க்கெட்டில் விலையை மாற்றுவது, நம் கைவசம் இல்லை. ஆனால், நமது மனோபாவத்தை மாற்றுவது, நம் கையில்தான் உள்ளது. ஆகவே, மனோபாவத்தை மாற்றிக் கொண்டாலே, நாம் உயர்ந்த நிலையை அடைந்து பிறவிப்பயன் பெற்று விடலாம். இதற்காகவே நமக்கு இந்த மனித உடல் கிடைத்துள்ளது!

இரும்புப் பெட்டியின் சாவியை, நமது இடது பக்கமாகச் சுற்றினால் பூட்டிக் கொள்கிறது; வலது பக்கமாகத் திருப்பினால் திறந்து கொள்கிறது. 'எங்கும் நிறைந்த பரம்பொருளின்

செல்வம் நமக்கு வேண்டும்' என்ற குறுகிய நோக்கினால், அவரைப் பூட்டிவிடுகிறோம். இதற்குமாறாக, 'அவரது செல்வத்தை அனைவரும் பெறட்டும்' என்ற மனப்பான்மை பெற்றோமானால் பூட்டிய பூட்டு திறந்துவிடும்.

படிப்பறிவின்றி இருந்தாலும் உண்மையான உள்ளத்தோடு பரமாத்மாவிடம் அன்பு செய்பவர்களின் உள்ளத்தில், வேதம் மற்றும் அறநூல்களில் கூறப்பட்ட விஷயங்கள் தாமாகவே தோன்றுகின்றன என்று கேட்டுள்ளோம். இதற்கு என்ன காரணம்? வேதம் மற்றும் அறநூல்களில் கூறப்பட்ட அபூர்வமான விஷயங்கள் நமக்குப் பயன்படக் கூடியவை. ஆனால், அவை பகவானுக்குப் பயன்படக் கூடியவையல்ல. அஞ்ஞானிகளான நமக்குத்தான் அறநூல்கள் தரும் ஞானத்தால் பயனுண்டு. அறிவே வடிவான பகவானுக்கு இவற்றால் என்ன பயன்? 'பொருட்களை விரும்புபவருக்குத் தத்துவ ஞானத்தைக் கொடுக்கக்கூடாது' என்ற வரைமுறை பகவானுக்குக் கிடையாது. ஆனால், பொருட்களிடம் பற்று வைத்திருப்போர், பரம்பொருள் அறிவைப் பற்றிக் கொள்ள இயலாது. உலகப்பொருளையும் இன்பநுகர்ச்சியையும் விடாமல், நாம் தத்துவஞானம் பெற விரும்பினால், அது கிடைக்காது.

அடியார்கள், இரு எறும்புகளின் கதையை எடுத்துக்காட்டாகக் கொடுத்துள்ளனர். உப்புக்குவியலில் வசித்த ஓர் எறும்புக்கு, சர்க்கரைக் குவியலில் வசித்த ஓர் எறும்புடன் நட்பு ஏற்பட்டது. நட்பினால் அது சர்க்கரையில் வாழும் எறும்பை உப்புக்குவியலுக்கு அழைத்துச் சென்றது. உப்பை உண்ணுமாறு கூறிற்று. ''இது என்ன சர்க்கரையா, தின்பதற்கு?'' எனக் கேட்டது, சர்க்கரை எறும்பு. ''சர்க்கரை என்பது என்ன? இதைக் காட்டிலும் சுவையாக இருக்குமா?'' என வினவிற்று, உப்பு எறும்பு. ''இது இனிப்பு அல்ல. இதைக் காட்டிலும் முற்றிலும் மாறுபட்ட பொருள் அது'' என்றது, சர்க்கரை எறும்பு. பரிட்சை செய்து பார்ப்பதற்காக, உப்பு எறும்பைத் தன்னுடன் அழைத்துச்

சென்றது, சர்க்கரை எறும்பு. பசி ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வது? என்று சிறிது உப்புத் துணுக்கையும் கவ்விச் சென்றது, உப்பு எறும்பு. சர்க்கரையைச் சுவைத்தாலும் சிறிது உப்பு வாயில் இருந்த காரணத்தால், அதன் முழுச் சுவையையும் அறிய முடியவில்லை. ஆகவே, இனிப்பின் உயர்ந்த சுவையை ஒப்புக் கொள்ள மறுத்துவிட்டது, உப்பு எறும்பு. ''வரும்பொழுது என்ன எடுத்து வந்தாய்?'' எனக் கேட்டது, சர்க்கரை எறும்பு. ''பசித்தால் உண்பதற்காகச் சிறிது உப்புத் துணுக்கை எடுத்து வந்தேன்'' என்றது, உப்பு எறும்பு. ''அதை உமிழ்ந்துவிட்டுச் சர்க்கரையைத் தின்று பார்'' என்றது, சர்க்கரை எறும்பு. ''தொந்தரவு செய்யாதே, என்னைச் சாப்பிடவிடு'' என்றதாம் உப்பு எறும்பு.

இவ்விதமே சத்சங்கத்தில் ஈடுபடும் மக்களும் பிரவசனங்களைக் கேட்கிறார்கள். ஆயினும் செல்வம், புகழ், மரியாதை, பதவி ஆகியவற்றைப் பிடித்துக் கொண்டு கேட்கின்றனர். சாதகர்கள், சத்சங்கத்தின் முழுச்சுவையையும் அறிந்தவர்கள். 'சத்சங்கம் எத்தனை ஆனந்தமாக இருக்கிறது!' என்றால், 'ஆம், ஆம் இருக்கிறது' என்று மற்றவர்கள் சந்தேகத்துடன் சொல்கிறார்கள். அதனால், அங்கு ஆனந்தம் எப்படி வரும்? வாயில் உப்பு ஒட்டிக் கொண்டிருக்கிறதே! மனத்தின் நோக்கமோ பணம் சேர்ப்பதிலும், போகங்கள், பட்டம்–பதவியிலும்தான். அதனால், இவற்றின்பால் நாட்டம் செலுத்தாமல், பரமாத்மாவை அடையும் நோக்கத்தில் நாட்டத்தைச் செலுத்த வேண்டும்.

வாழ்வின் இறுதியில், நான் பொன்னையும் பொருளையும்கூட எடுத்துச் செல்லப் போவதில்லை. அவற்றைச் செயலில் பயன்படுத்திக் கொள்ளுங்கள். அதில் தடையேதுமில்லை. சாலையைப் பூட்டி வைக்க முடியுமா? அது போக்குவரத்திற்காகவே ஏற்பட்டது அன்றோ! அதைப் பயன்படுத்தத்தான் வேண்டும். அது போன்றே, உலகியலில் பொருட்களைப் பயன்படுத்திக் கொள்ளவே வேண்டும்.

அவை வந்து செல்பவை. தாங்களும் பயன்பெற்று, மற்றவருக்கும் அளித்து மகிழுங்கள். ஆயினும், நம் நோக்கம் பொருள் சேர்த்து வைத்துக் கொள்வதிலும், புலனுகர்ச்சியில் மட்டுமே இருந்துவிட்டால், †அசுர இயல்புகள் வந்துவிடும். ***'காமோபபே$_4$ாக$_3$பரமா ஏதாவதி$_3$தி நிப்ஸ்சிதா: ॥' (கீதை 16/11)*** – 'புலனுகர்ச்சியே போதுமானது; அதுவே எல்லாம்.' விஷயம் தெரிந்தவர்கள் கூறுவார்கள்— ''சகோதரா! சிந்தித்துப் பார். இவற்றுடன் நமது தொடர்பு எத்தனை நாள் நிலைத்து நிற்கும்?'' மிக உயர்ந்த ஆடை அணிந்து கொண்ட பெண், அது சிறிது கசங்கினாலும் பொறுப்பதில்லை. விஷய போகங்களில் நாம் எவ்வளவு லயித்து ஈடுபட்டு விடுகிறோம்! துணி சிறிது அழுக்கானால்கூடப் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை. நல்ல துணிமணிகள் அணிந்து கொள்வது தவறாகாது. சமயத்திற்கேற்ப உடையணிவதும் தவறில்லை. ஆனால், அதுவே எல்லாமாக ஆகிவிடக் கூடாது. எவ்வளவு கவனம் செலுத்தினாலும் துணிகள் நைந்தும் மங்கியும் போய்விடுகின்றன.

புலனுகர்ச்சியில் பறவைகளும் விலங்குகளும்கூட ஈடுபடுகின்றன. மனிதனுக்கோ பகவான் பகுத்தறியும் திறனைத் தந்துள்ளான். சாரம் எது? அசாரம் எது? – என ஆராயும் திறமை பெற்றவன், மனிதன். அந்த சக்தியைச் சுக போகங்களை அனுபவிப்பதிலும், மற்றவர்க்குத் தீமை செய்வதிலும் விரயம் செய்ய வேண்டாம். ரிஷி–முனிவர்கள் அனைவரது மேன்மைக்கும் – மங்களத்திற்கும் – தமது அறிவைச் செலவழித்தனர். அதனாலேயே மகான்கள் ஆகிவிட்டனர். போர்க்காலத்தில் மறைந்து தாக்குவது, ஏமாற்று வேலை செய்து பகைவரை அழிப்பது போன்ற செயல்கள் அசுரர்–அரக்கர்களிடமே காணப்படுகின்றன. ரிஷி–முனிவர்கள் திறமை இருந்தும் இதுபோன்ற செயல்களைச் செய்வதில்லை.

† இதை 'ஆஸுரீ ஸம்பத்' என்று கீதை கூறுகிறது.

செல்வம் சேர்க்கும் செய்கைகளையும் அசுரர்களே செய்து வந்தனர். யாரும் பொருள் சேர்க்கக் கூடாது என்று இதற்குப் பொருள் அல்ல. நல்லமுறையில் செலவிடுதல் அவசியம் என்றே இதன் பொருள். செல்வம், பொருள், கல்வி, வலிமை, அறிவு – இவற்றைச் சேகரிப்பதால் பெருமை இல்லை. நற்பயனாக்குவதாலேயே அவை பெருமை பெறுகின்றன.

நீதி நூல் கூறும் சுலோகம் ஒன்று—

*வித்$_3$யா விவாத$_3$ாய த$_4$நம் மத$_3$ாய*
*ஶக்தி: பரேஷாம் பரிபீட$_3$நாய ।*
*க$_2$லஸ்ய ஸாதே$_4$ார்விபரீதமேதஜ்க்ஞாநாய*
*த$_3$ாநாய ச ரக்ஷணாய ॥*

"தீயவர் பெறும் கல்வி வாதம் செய்ய மட்டுமே. அவர் ஈட்டும் பொருள் செருக்குற்றுத் திரிவதற்கே. அவர் பெறும் வலிமை, மற்றவரைத் துன்புறுத்துவதற்காகவே. மாறாக, நல்லோரிடமுள்ள கல்வி, அவருக்கு ஞானத்தைத் தருகிறது. அவர் செல்வம் தானத்தால் பயன் பெறுகிறது. வலிமை மற்றவரைக் காக்கப் பயன்படுகிறது. இதனால், உயிரினங்கள் நன்மை பெறுகின்றன."

ஆகவே, தம்மிடம் உள்ள வலிமை, நேரம், பொருட்கள் எத்தனை இருப்பினும் குறைவாகவோ, அதிகமாகவோ, அவற்றை அனைத்து உயிரினங்களின் நன்மைக்காகவே செலவிட வேண்டும். அனைவரும் பகவானின் குழந்தைகள். ஆகவே, அனைவரின் நன்மைக்காக, நமது சக்தி முதலானவற்றைக் கொடுத்தால், பகவானின் சக்தி நமக்குக் கிடைத்துவிடும். ஏனெனில், எம்பெருமான் உறுதி செய்திருக்கிறார்—

**யே யத$_2$ா மாம் ப்ரபத்$_3$யந்தே**
**தாம்ஸ்ததை$_2$வ ப$_4$ஜாம்யஹம் ।**
**மம வர்த்மாநுவர்தந்தே**
**மநுஷ்யா: பார்த$_2$ ஸர்வஶ: ॥**

***(ஸ்ரீமத் பகவத்கீதை 4/11)***

''பிருதையின் செல்வனே! எந்த பக்தர்கள் எவ்விதம் என்னை சரணமடைவரோ, நானும் அவர்களுக்கு அதற்கேற்பவே அடைக்கலம் அளிக்கிறேன். (ஏனெனில்,) மாந்தர் அனைவரும் எல்லாவிதங்களிலும் எனது வழியைப் பின்பற்றுகிறார்கள்.''

செல்வமோ, கல்வியோ, வலிமையோ மட்டுமின்றி, பகவானே நமக்குக் கிடைத்துவிடுகிறார். ஆன்மிகச் சொற்பொழிவுகளைக் கேட்டு விஷயங்களை எவ்வாறு கடைப்பிடிப்பது? என்பதில் கவனமாய் முயலவேண்டும். கடைப்பிடிக்க இயலாவிட்டால் சத்சங்க விஷயங்களைக் கேட்கவே கூடாது என்று பொருளல்ல. கேட்கவும் வேண்டும். கேட்டுக் கொண்டே இருந்தால், அதைப் பின்பற்றவேண்டும் என்ற எண்ணம் மனத்தில் தோன்ற ஆரம்பிக்கும். கேட்ட விஷயங்களை நடைமுறையில் கொண்டுவர முயலவேண்டும்.

ஜீவன், பரமாத்மாவின் அம்சமான காரணத்தால், தற்போதுள்ள இந்நிலையில் ஆனந்தம் அடைய முடியாமல், தன்னிலையில் இருந்து மேலும் உயர விழைகிறான். பரமாத்மாவை அடையாத வரை பூர்ணமான சுகம் பெற இயலாது. மேற்கூறியபடி முழு ஈடுபாட்டுடன் சாதனைகள் செய்தால், மனிதன் தன்னிலையிலிருந்து முன்னேறிப் பரம்பொருளை அடையமுடியும். இது மனிதப் பிறவியில்தான் சாத்தியமாகும். ஏனெனில், பரமாத்மா இம்மனித உடலை மனிதன் தன்னை அடையவேண்டும் என்ற நோக்கத்துடன் அளித்துள்ளார். அந்நோக்கத்திற்காக, அதற்கேற்ற சாதனங்களையும் முழுமையாகத் தந்துள்ளார். ஆகவே, நாம் அனைவரும் பகவானைப் பெற முழு ஈடுபாட்டுடன் முயற்சி செய்யவேண்டும் என்பதே இதன் திரண்ட பொருள்.

**நாராயணா! நாராயணா! நாராயணா!**



॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் வெளியீடுகள்

## பாராயண நூல்கள்

| Code No. | | |
|---|---|---|
| 1. | 743 | ஸ்ரீமத் பகவத்கீதா மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] |
| 2. | 793 | ஸ்ரீமத் பகவத்கீதா – தமிழ் மூலம் & விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் – தமிழ் மூலம் |
| 3. | 795 | ஸ்ரீமத் பகவத்கீதா – பொழிப்புரை |
| 4. | 1918 | ஸ்ரீமத் பகவத்கீதை [மூலம்–பொழிப்புரை] [கையடக்கப் பிரதி] |
| 5. | 823 | ஸ்ரீமத் பகவத்கீதா – [மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] – பதவுரை–பொழிப்புரை] |
| 6. | 800 | ஸ்ரீமத் பகவத்கீதா–தத்வவிவேசனீ [மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] – பதவுரை–பொழிப்புரை–விளக்கவுரை] |
| 7. | 389 | கீதா மாதுர்யம் [ஸ்ரீமத் பகவத்கீதா – வினா-விடை] |
| 8. | 1426 | ஸ்ரீமத் பகவத்கீதா – ஸாதக ஸஞ்ஜீவநீ [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை – விளக்கவுரை] [1 முதல் 9 அத்தியாயங்கள்] |
| 9. | 1427 | [10 முதல் 18 அத்தியாயங்கள்] |
| 10. | 600 | ஸ்ரீஹநுமாந் சாலீஸா – தமிழ் [மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 11. | 794 | விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் – தமிழ் மூலம் |
| 12. | 1256 | அத்யாத்ம ராமாயணம் – தமிழ் மொழிபெயர்ப்பு |
| 13. | 1606 | ஸ்ரீமந் நாராயணீயம் – தமிழ் மூலம்–விளக்கவுரை |
| 14. | 1904 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] – [தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 15. | 1618 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] – பொழிப்புரை |
| 16. | 1890 | கம்ப ராமாயணம் – சுந்தர காண்டம் [பாடல்கள்] |
| 17. | 1788 | ஸ்ரீ முருகன் துதிமாலை [தோத்திரத் தொகுப்பு] |
| 18. | 1789 | திருப்பாவை விளக்கம் |
| 19. | 1912 | விரத கல்ப த்ரயம் |

## ஸ்ரீமத் பாகவத மகாபுராணம்

[ தமிழ் மூலம் – பொழிப்புரை ]



## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

[ தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு ]



## அறிவுரை நல்கும் நூல்கள்

| | | |
|---|---|---|
| 46. | 644 | சுசீலா — ஓர் லக்ஷ்யப் பெண்மணி |
| 47. | 645 | நள—தமயந்தி [கதைப் பகுதி] |
| 48. | 646 | பல்சுவைக் கதைகள் |
| 49. | 655 | ஒன்றே செய்மின்! நன்றே செய்வீர்!! |
| 50. | 741 | மஹாத்மா விதுரர் |
| 51. | 792 | முக்கியமான எச்சரிக்கை |
| 52. | 805 | தாய்மையின் அவல நிலை |
| 53. | 850 | மஹான்களுடைய அமுத மொழிகள் |
| 54. | 952 | மஹான்களின் மணிமொழிகள் |
| 55. | 953 | மஹான்களின் சீரிய உபதேசம் |
| 56. | 1110 | ஆயிரம் அமுதத் துளிகள் |
| 57. | 1117 | நாட்டின் இன்றைய நிலையும், அதன் விளைவுகளும் |
| 58. | 1134 | கீதையின் பெருமையை விளக்கும் கதைகள் |
| 59. | 1243 | உண்மையான சுகம் |
| 60. | 1246 | பக்த சரித்திரம் |
| 61. | 1289 | சாதனை நெறி |
| 62. | 1353 | ராமாயணத்தில் சில முக்கிய பாத்திரங்கள் |
| 63. | 1354 | மஹாபாரதத்தில் சில முக்கிய பாத்திரங்கள் |
| 64. | 1480 | செயல்கள் அனைத்தும் பகவானுக்கே |
| 65. | 1481 | பகவானை நேரில் காண்பதற்கான வழி |
| 66. | 1482 | பக்தியோகத்தின் பெருமை |

எங்களது நிறுவனம் ஆன்மீகம் மற்றும் மானிட நல்லொழுக்கம் வளர உதவும் நூல்களை தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி, ஆங்கிலம், சம்ஸ்கிருதம், உருது, குஜராத்தி, மராத்தி, பெங்காலி, ஒரியா, அஸ்ஸாமியா மற்றும் நேபாளி மொழிகளில் பல ஆண்டுகளாக வெளியிடுகிறோம் என்பதை மிக்கப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

**எங்களது தமிழ்நாடு கிளை :**

கீதா பிரஸ் புத்தக நிலையம், கீதா பிரஸ் மேன்ஷன்,
**8/1 M**, ரேஸ் கோர்ஸ் சாலை,
(தாமஸ் பார்க் பஸ்—ஸ்டாப் அருகில்),
கோயம்புத்தூர் – **641 018.**

॥ Shri Hari ॥

## Some of Our English Publications

Code No.

452 453 **Shrimad Valmiki-Ramayana** [With Sanskrit Text and English Translation] Set of two volumes

455 **Shrimad Bhagavadgita** [Sanskrit Text and English Translation] Pocket Size

456 **Shri Ramacharitamanasa** [With Hindi Text and English Translation]

457 **Shrimad Bhagavadgita – Tattvavivechani** With Sanskrit text, Translation and Deatiled Commentary [By Jayadayal Goyandka]

487 **Gita Madhurya**

534 **Shrimad Bhagavadgita** [Sanskrit Text and English Translation] [Hard Bound Edition] Pocket Size

564 565 **Shrimad Bhagavata Mahapuranam** [With Sanskrit Text and English Translation] Set of two volumes

786 **Shri Ramacharitamanasa** (Medium Size]

824 **Songs from Bhartrhari**

1080 1081 **Shrimad Bhagavadgita – Sadhaka Sanjivani** [With Sanskrit text, Transliteration, Translation and Detailed Commentary] Set of two volumes [By Swami Ramsukhdas]

1159 1160 **Shrimad Bhagavata Mahapuranam** [English Translation only] Set of two volumes

1318 **Shri Ramacharitamanasa** [With Hindi Text Transliteration, Roman Transliteration and English Translation]

1406 **Gita Madhurya**

1411 **Shrimad Bhagavadgita** – Roman Gita [Sanskrit Text, Transliteration and English Translation] Book Size

1528 **Hanuman Chalisa** (Roman) (Pocket Size)

1550 **Shri Ramacharitamanasa – Sundara Kanda** (Roman)

1584 **Shrimad Bhagavadgita** – Roman Gita [Sanskrit Text, Transliteration and English Translation] Pocket Size

1617 **Shri Ramacharitamanasa** [A Romanized Edition with English Translation]

1638 **Sri Hanuman Chalisa**

1643 **Ramaraksastotram**

1658 **Shrimad Bhagavadgita** – Roman Gita [Sanskrit Text, Transliteration and English Translation]

